POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G 6-TN-MS C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Daily of the People

# கறுப்புபணவேட்டை • மேலும்

# தீவிரம் ஆகும்

Regd. No. TN-MS (C) 244 Phone 420212 4 பக்கம் விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10] சென்னை 20-12-1985 வெள்ளி வெளியீடு 21-12-1985 சனி [இதழ 63

## பிரதமர் ராஜீவ் அறிவிப்பு

டாமன், டிச. 20- கறுப்புபண வேட்டை மேலும் தீவிரமடையுமென்று பிரதமர் ராஜீவ் அறிவித்தார்.

கோவா சென்றிருந்த பிரதமர் ராஜீவ்காந்தி அங்கிருந்து டெல்லி புறப்படுமுன நிருபர்களுக்கு பேட்டியளித்தார்.

பொருளாதார குற்றங்களை கண்டு பிடிப்பதில் மத்திய புலனாய்வுத் துறையும், வருமானவரித் துறையும் தீவிரமாக ஈடு பட்டுள்ளன.

இந்த வேட்டை தொடர்ந்து நடைபெறும் என்று பிரதமர் கூறினார்

### அரசியல் இல்லை

சில பெரிய நிறுவனங்களில் அதிகாரிகள் சோதனை நடத்தி கறுப்புப் பணம் கண்டு பிடித்ததை குறித்து பிரதமரிடம் நிருபர்கள் கேட்டனர்.

அதற்கு பிரதமர் பதிலளிக்கையில் அது போன்ற வேட்டைகள் நடத்துவதில் எந்த அரசியல் கண்ணோட்டமும் கிடையாது என்றார்.

தகுந்த ஆதாரமில்லாமல் அதிகாரிகள் அந்த நிறுவனங்களில் சோதனையிட சென்றிருக்க மாட்டார்கள் என்றும் பிரதமர் கூறினார்.

### கோவா மாநிலமாகிறது

மத்திய அரசின் ஆளுகைக்குட்பட்ட யூனியன் பிரதேசமான கோவாவுக்கு தனிமாநில அந்தஸ்து கொடுப்பது குறித்து மத்திய உள்துறை இலாகா பரிசீலித்து வருவதாகவும் பிரதமர் தெரிவித்தார்.

உரிய நேரத்தில் அது பற்றிய அறிவிப்பு வரு மென்று ராஜீவ் கூறினார்.

அசாமில் கண பரிஷத் கட்சி ஆட்சி அமைப்பதற்கு தமது கட்சி இடையூறாக இருக்காது என்றும் பிரதமர் கூறினார்.



## அசாம்: முடிவுகள் விவரம்

கவுகாத்தி, டிச 20— அசாம்மாநில சட்டமன்ற முடிவுகள் விவரம் வருமாறு

| | |
|---|---|
| மொத்த இடங்கள் | 126 |
| தேர்தல் நடந்தது | 125 |
| முடிவுகள் அறிவிக்கப்பட்டது | 116 |
| கணபரிஷத் | 58 |
| இந்திரா காங்கிரஸ் | 22 |
| யூ.எம்.எப் | 17 |
| கம்யூனிஸ்ட் கட்சி | 2 |
| மற்ற கட்சிகள் | 7 |
| சுயேச்சைகள் | 10 |

## பட்டதாரிகளிடம் மோசடி செய்த பட்டதாரி கைது

சென்னை, டிச. 20 — சென்னை எழும்பூர் கெங்கு ரெட்டித் தெருவில் உள்ள பட்டதாரி வாலிபர் விஜயகுமார் (வயது 34) இவர் பட்டதாரிகளுக்கு வங்கிகளில் கடன் வாங்கித் தருவதாக விளம்பரம் செய்தாராம்.

அதை பார்த்துகரையான் சாவடியைச் சேர்ந்த ராஜேந்திரன் என்பவர் வந்தாராம் இவரிடம் விஜயகுமார் நுழைவு கட்டணமாக 50 ரூபாயும் டெபாசிட்டாக 500 ரூபாயும் வாங்கிக் கொண்டாராம்

அமைந்தகரையில் உள்ள ஒரு வங்கியில் கடன் பெற ஏற்பாடு செய்தார் அந்த பணத்தை ஞானசூரி என்ற பெயரில் செக்காக வாங்கியிருக்கிறார்

ராஜேந்திரன் பணம் கேட்ட போது இல்லை என்று மறுத்துவிட்டாராம்;

புகாரின் பேரில் விஜயகுமார் கைது செய்யப்பட்டார் இதுபோன்றுஇவர்பலரிடம் மோசடி செய்துள்ளதாக தெரியவருகிறது.



இலங்கைத் தமிழர் நலநிதிக்கு முதல்வர் புரட்சிதலைவரிடம், சென்னை நகர ஷெரீப் முகமது அப்துல் அலி ரூபாய் 15ஆயிரம் வழங்கியபோது எடுத்த படம்

## கவாஸ்கர் சாதனை: மாநிலங்கள் அவையில்பாராட்டு

புதுடெல்லி, டிச 20— ஆஸ்திரேலியா, இந்தியா ஆகிய அணியினருக்கிடையே நடக்கும் கிரிக்கெட்டெஸ்ட் ஆட்டத்தில் கவாஸ்கர் 31வது சதம் அடித்து சாதனையை ஏற்படுத்தினார் இதுவரை ஆடிய டெஸ்ட் ஆட்டங்களில் கவாஸ்கர் 9 ஆயிரத்துக்கும் மேற்பட்ட ரன்களை எடுத்து குவித்துள்ளார்.

இந்த சாதனையை நேற்று மாநிலங்களவையில் உறுப்பினர்கள் மேஜையை தட்டி ஆரவாரம் செய்து புகழ்ந்து பாராட்டினர் இந்த மகிழ்ச்சியில் அவைத் தலைவர் துணை ஜனாதிபதி ஆர் வெங்கட்ராமனும் கலந்து கொண்டார்

## ஜனாதிபதி தேர்தல்:எட்வர்ட் கென்னடி போட்டி?

போஸ்டன், டிச 20— அமெரிக்க ஜனாதிபதி தேர்தலில் தான் போட்டியிடப் போவதில்லை என்று எட்வர்ட் கென்னடி தெரிவித்தார்.

ஜனாதிபதியாக இருந்து சேவை செய்வதைவிட ஒரு செனட் உறுப்பினராக இருந்தே, தன்னால் நாட்டுக்கு நல்ல முறையில் உழைக்க முடியும் என்றும் அவர் கூறினார்.

வரும் 1986ம் ஆண்டில் தான் அமெரிக்காவில் ஜனாதிபதி தேர்தல் நடைபெறும். ரீகனுக்குப் பிறகு ஜனநாயகக்கட்சி சார்பில் எட்வர்ட் கென்னடி போட்டியிடலாம் என்ற செய்தி அடிபடுகிறது.

## கவர்னர் மத்திய அரசின் ஏஜண்டா? குரானா பதில்

சென்னை, டிச 20— கவர்னர் பதவி என்பது மத்திய அரசின் ஏஜண்டு பதவிகளா என்ற கேள்விக்கு தமிழக ஆளுனர் எஸ் எல் குரானா பதில் அளித்துள்ளார்.

சென்னை வந்த சிக்கிம் நாட்டு கவர்னர் டி வி ராஜேஸ்வருக்கு சென்னை நகரவாசிகள் கமிட்டி வரவேற்பு அளித்து பாராட்டியது

இந்த வரவேற்பு விழாவில் தமிழக ஆளுனர் குரானா கலந்து கொண்டு பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:-

கவர்னர் பதவிகள் சுதந்தரமான பதவியாகும் மத்திய அரசின் ஏஜெண்டுகள் அல்ல ஆளுனர்கள் எத்தகைய முடிவையும் அவர்கள் தாமாகவே சுதந்தரமாக ஆலோசித்து முடிவு செய்ய வேண்டிய நிலையில் இருப்பவர்கள் அவர்களுக்கு அரசியல் நிர்ணய சட்ட விதிமுறைகள் நன்கு தெரிந்திருக்க வேண்டும்.

அப்போது தான் மாநிலங்களில் அவ்வப்போது ஏற்படும் அரசியல் பிரச்சினைகளை நல்லமுறையில் சமாளித்து உரிய நடவடிக்கைகளை மேற்கொள்ள முடியும்

தமிழகத்தின் கவர்னராக இருக்கும் என்னுடைய பதவி காலத்தில் இதுவரை பிரதமர் ராஜீவ் காந்தியிடம் இருந்தோ அல்லது முந்தைய பிரதமர் இந்திரா காந்தியிடம் இருந்தோ எனக்கு தொலைபேசியில் ஒரு தடவைகூட அழைப்பு வரவில்லை. புதுடெல்லியிலிருந்து என்னை தொலைபேசியில் அவர்கள் இருவருமே கூப்பிட்டு பேசவில்லை.



அரசியல் சட்டப்படிநீதி வழுவாமல் ஒரு கவர்னர் தன்னுடைய பொறுப்புக்களை திறமையுடன் நிர்வகிக்க வேண்டும்

தன்னுடைய நடவடிக்கைகள் மற்றும் நிர்வாக பொறுப்புகள் ஆகியவற்றை மக்கள் எப்போதும் கண்காணித்துக் கொண்டே இருக்கிறார்கள் என்றஉணர்வுடன், கவர்னர்கள் செயல்பட வேண்டும்

இவ்வாறு கவர்னர் குரானா கூறினார்

## ரஷ்யாவை ஆட்டிப்படைக்கும் வீடியோ சினிமா மோகம்

மாஸ்கோ, டிச 20— வீடியோ சினிமா மோகம் உலகெங்கும் பரவிவிட்டது

கட்டுப்பாடுகளுக்குப் பெயர் போன சோவியத் ரஷ்யாவிலும் வீடியோ அதிகரித்து விட்டது.

1970 முதற்கொண்டே ரஷ்யாவில் வீடியோ ஏராளமாக விற்பனை ஆகிவருகிறது

அவற்றில் ரஷ்ய சினிமா படங்களையும், பாலேநடன காட்சிகளையும் திரையிட்டும் பார்ப்பார்கள்.

பொதுவாக ரஷ்யப் படங்கள் பொழுது போக்குஅம்சங்கள், கவர்ச்சி அடிதடி, பாடல் காட்சிகள் உள்ளதாக இராது

வரலாற்றுத் திரைப்படம் நாடகம் சம்பந்தப்பட்ட படங்களே அங்கு பெரும்பாலும் தயாரிக்கப் படுகின்றன

ஆனால் சமீபகாலமாக ரஷ்ய மக்களுக்கு அமெரிக்க சினிமாக்களின் மேல் மோகம் வந்து விட்டது

கிளின்ட் ஈஸ்ட்வுட் நடித்து தமிழகத்தில் சக்கை போடு போட்ட "திகுட், திபேட் அண்ட்தி அக்ளி" படம் வீடியோவில்எடுக்கப் பட்டு ரஷ்யாவில் ரகசியமாக விற்கப்படுகின்றன.

அப்படிப்பட்ட படங்கள் ரஷ்யாவில் தடை செய்யப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. அந்தப் படங்களை வீடியோவில் ரகசியமாக போட்டுப் பார்த்து ரசிக்கிறார்கள் பல ரஷ்யர்கள்

சோவியத் ரஷ்யாவில் மற்ற அத்தியாவசியப் பண்டங்களின் விலை மலிவு. ஆனால் வீடியோ போன்ற ஆடம்பரப் பொருள்களின் விலைகள் மிக அதிகம்.

ஆனாலும் ரஷ்யர்கள் பலர் டெலிவிஷன், வீடியோ டெக் வாங்கி வைத்திருக்கிறார்கள், தடை செய்யப்பட்டுள்ள அமெரிக்க ஆபாச திரைப்படங்களை வாங்கி திரையிட்டு ரசித்துப் பார்க்கிறார்கள்,

ஆர்வத்துடன் அவற்றை மக்கள் பார்ப்பதால் வீடியோ படரகசிய விற்பனை அதிகரித்துள்ளது. அரசு என்ன தான் நடவடிக்கை எடுத்தாலும் ரகசிய வீடியோ வியாபாரத்தைத் தடுக்க முடியவில்லை.

இதைத் தொடர்ந்து சோவியத் அரசு ஒரு முடிவு செய்தது.

பொழுது போக்கு நிறைந்த சினிமாக்களாக எடுத்து வீடியோவில் பதித்து விற்றால் என்ன?

சோவியத்தின் இந்த ஏற்பாடும் அவ்வளவாகப் பயன் பட்டு வரவில்லை.

என்னதான் பொழுது போக்கு அம்சம் இருந்தாலும் அமெரிக்கப்படங்களில் வருகிற கவர்ச்சிக் காட்சிகள், 'கிக்' சண்டைக்காட்சிகள் போன்றவை ரஷ்யப் படங்களில் இடம் பெறாதது ரஷ்யர்களுக்கு ஒரு குறைதான். அமெரிக்க படங்களையே அவர்கள் விரும்புகிறார்கள்

சென்னையில் சில இடங்களில் தற்போது ஓடிக் கொண்டிருக்கும் "பஸ்ட் பிளட்" என்ற ஆங்கிலப்படத்தின் காசட்டுகள் மாஸ்கோவில் ரகசிய வர்த்தகர்களிடையே தாராளமாக நடமாடுகிறது

லாஸ்ட் டாங்கோ இன் பாரிஸ்"

"பேனி அண்ட் அலெக்சாண்டர் அமெடியஸ்' ஆகிய அமெரிக்க படங்கள் ரஷ்யாவில் வீடியோவாக விற்பனையாகின்றன.

ஆனால் ரஷ்யாவில் வீடியோ டேப் விலை அதிகம் அமெரிக்காவில்வீடியோ டேப் (படம் எடுக்காதது) விலை சுமார் ரூபாய் 60

ஆனால்ரஷ்யாவில் விலை ரூபாய் 800 என்றாலும் அவை நன்கு விற்பனை ஆகின்றன

## சரிதா மீது பட அதிபர் வழக்கு

சென்னை, டிச 21— குங்குமப் பொட்டு படத்தை தயாரித்த பத்ம பாலாஜி பிக்சர்ஸ் அதிபர் கேசராதா, நடிகை சரிதா மீது வழக்கு தொடர்ந்துள்ளார்.

அப்படத்திற்கு சரியான முறையில் கால்ஷீட்கொடுக்காததால் நஷ்டம் ஏற்பட்டதாகவும் எனவே 2 லட்சரூபாய் நஷ்டஈடு தர வேண்டும் என்றும் கோர்ட்டில் வழக்கு தொடரப்பட்டுள்ளது வழக்கறிஞர் என் சிராகவாச்சாரி இந்த வழக்குக்காக படஅதிபர் சார்பில் ஆஜராகியுள்ளார்

## சங்கிலி அறுத்த வாலிபர்கள் கைது

சென்னை, டிச 20— சென்னை மேற்குமாம்பலத்தில் சவுந்தரவல்லி என்ற பெண்ணிடம் வீடு புகுந்து 4 சவரன்சங்கிலியைஅறுத்து சென்ற மேத்தாநகர் உதயகுமார் (வயது 21) கண்ணன் (வயது 20) ரவி (வயது 30) ஆகியோர் கைதுசெய்யப்பட்டனர் நகை பறிமுதல் செய்யப்பட்டது.

வழக்கு சம்பந்தமாக கோபால் என்ற மற்றொரு வாலிபரையும் போலீசார் தேடி வருகின்றனர்.

## கேரளாவில் "திடீர்" தேர்தலா? டெல்லி முடிவு

புதுடெல்லி, டிச 20— கேரளாவில் தேர்தலை நடத்துவதற்கு மத்திய அரசு தயக்கப்படுவதாக புதுடெல்லி வட்டாரங்கள் தெரிவிக்கின்றன அநேகமாக தேர்தல் தள்ளிப் போடப்படும் என்று தெரிகிறது

கேரள மாநிலத்தில் கூட்டணி ஆட்சி நடைபெற்று வருகிறது. இந்திரா காங்கிரசைச் சேர்ந்த கருணாகரனே முதல் அமைச்சராக பதவி வகித்து வருகிறார்

கேரளாவில் தற்போது ஏற்பட்டிருக்கும் அரசியல் நெருக்கடியால் திடீர் தேர்தல் நடக்கும் என்று எதிர் பார்க்கப்பட்டது

கேரள மாநில இந்திரா காங்கிரஸ் கட்சியும்இடைத் தேர்தல் நடத்துவதற்கு ஒப்புதல் அளித்துள்ளது ஆனால் இந்திராகாங்கிரஸ் தவிரஇதர கூட்டுக்கட்சிகள் தேர்தலை நடத்துவதற்கு சம்மதம் அளிக்க வில்லை என்றே கூறப்படுகிறது

இந்த நிலையில் கேரள இடைத் தேர்தல் பற்றி புதுடெல்லி மேலிடம் ஒரு புதிய முடிவை மேற்கொள்ளக்கூடும் என்று தெரிகிறது

அண்மையில் நடந்து முடிந்த நாடாளு மன்ற சட்ட சபை இடைத் தேர்தல்களில் இந்திரா காங்கிரஸ் கட்சிக்கு பெரும்பான்மை யிடம் கிடைக்கவில்லை குறிப்பாக அசாம் மாநிலத்தில் நடந்த பொதுத் தேர்தலில் புதிய கட்சியானகணபரிஷத் கட்சி பெரும்பான்மை வெற்றி பெற்றுள்ளது,

இதைத் தொடர்ந்து கேரள மாநிலத்தில் இடைத் தேர்தல் வருமானால் இந்திராகாங்கிரசுக்கு வெற்றி கிடைக்குமா என்பது சந்தேகமாகவே இருக்கிறது ஆகவே கேரளமாநில இடைத்தேர்தலை தற்போது ஒத்தி போடுவது தான் நல்லது என்ற முடிவை இந்திரா காங்கிரஸ் மேற்கொள்ளக்கூடும் என்பது நம்பகமாகத் தெரிகிறது.

## 22 தமிழர்களை கொன்று குவித்த சிங்கள ராணுவம்

சென்னை, டிச. 20 — இரண்டு பெண்கள் உட்பட 22 தமிழர்களை இலங்கை ராணுவம் கொன்று குவித்தது,

இலங்கையில் தமிழர்கள் பெரும் பான்மையாகவுள்ள வடக்கு கிழக்கு மாநிலங்களில் இந்தப் படுகொலைகள் நடந்துள்ளன.

யாழ்ப்பாணத்திற்கு வடபகுதியில் அப்பாவித்தமிழர்கள் மீது இலங்கை ராணுவத்தினர் வெடி குண்டுகளை வீசினர் இதில் ஐந்து பேர் கொல்லப்பட்டனர்

பொன்னலை என்ற இடத்தில் இலங்கை ராணுவத்தினர் சுட்டதில் 7 தமிழர்கள் கொல்லப்பட்டனர்,

மட்டக்களப்பு மாவட்டத்தில் இரண்டு பெண்களும் இரண்டு இளைஞர்களும் சுட்டுக் கொல்லப்பட்டார்கள்,

கிளிநொச்சியில் தன் கண் முன்னே தனது கணவரை ராணுவத்தினர் கொல்வதைப் பார்த்த பெண் அதிர்ச்சியிலேயே மரணமடைந்தார்.

மட்டக்களப்பு, திரிகோணமலை மாவட்டங்களில்விசாரணைக்கு என்று 97 தமிழ் இளைஞர்களை இலங்கை ராணுவம் கைது செய்து கடத்திச் சென்றது. அவர்கள் என்ன ஆனார்கள் வரை தெரியவில்லை என்பது தெரியவில்லை,

இரண்டு தினங்களுக்கு முன்னர் கொழும்பிலிருந்து திரிகோணமலைக்கு ரெயிலில் வந்து கொண்டிருந்த தமிழ் பயணிகளைஇலங்கை ராணுவத்தினர் பிடித்து சென்றனர். அவர்கள் என்ன ஆனார்கள் என்ற விபரமும் இது வரை தெரியவில்லை

மட்டக்களப்பிலிருந்து 40 கி.மீ.தொலைவில் பாசனத் துறை அலுவலகத்தை விடுதலைப்புலிகள் குண்டுவீசித் தகர்த்தனர் உண்மையில் இந்தக் கட்டிடத்தில் இலங்கைராணுவம் வெடிகுண்டுகளை சேமித்து வைத்துஇருந்தது.

## வெடி விபத்து: 5 பேர் சாவு

நாசிக், டிச. 20— நாசிக் அருகே ரசாயனத் தொழிற்சாலையில் திடீரென ஏற்பட்ட வெடி விபத்தில் 5பேர் இறந்தனர் 45 பேர் காயமடைந்தனர். இதில் 10 பேர் படுகாயமடைந்தனர்.

## அமெரிக்கவிஞ்ஞானிகளுக்கு ரஷ்ய தலைவர் கோர்பசேவ் அழைப்பு

வாஷிங்டன், டிச 20- சோவியத் ரஷ்யாவில் பூமிக்கடியில் நடத்தப்படும் வெடிகுண்டு சோதனை இடங்களைப் பார்வையிட வருமாறு அமெரிக்க நிபுணர்களுக்கு ரஷ்ய தலைவர் கோர்பசேவ் அழைப்பு அனுப்பியுள்ளார்

கோர்பசேவ் எழுதியுள்ள ஒரு கடிதத்தில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளதாக வாஷிங்டனில் ஒரு அதிகாரி கூறினார் அணுகுண்டு உற்பத்தியைஅடியோடு நிறுத்துவது பற்றி இருநாடுகளும் மீண்டும் கூடி பேச வேண்டும் என்றும், அதற்கான திட்டம் புதுப்பிக்கப்பட வேண்டும்என்றும் கோர்பசேவ் குறிப்பிட்டுள்ளார். அணுகுண்டு சோதனைகளை அடியோடு நிறுத்துவது பற்றிப் பேச்சுவார்த்தை அடுத்த மாதம் மீண்டும் தொடங்க விருக்கிறது.

வரும் வியாழக்கிழமை அன்று அணுகுண்டுவெடிப்பு சோதனை நடைபெற இருந்ததாகவும் ஆனால் அந்தச் சோதனை தள்ளிப் போடப்பட்டுள்ளதாகவும் அந்த அதிகாரி மேலும் கூறினார்.





மனிதன்

மனிதன் மனிதனாக வாழ வழி கண்டுபிடிக்கும் வேலை வாலிபர் முன் உள்ளது.

—பேரறிஞர் அண்ணா



வரதட்சணை

படித்தவன், படிக்காதவன் என்ற பேதம் உள்ளவரைக்கும் வரதட்சணை நிலை மாறாது.

—தந்தை பெரியார்

# நெல்லையில் அணுமின் நிலையம் உண்டா? மத்திய மந்திரி பதில்

புதுடெல்லி, டிச. 20- திருநெல்வேலி மாவட்டம் கூடங்குளத்தில் அணுமின் சார நிலையம் அமையுமா என்ற கேள்விக்கு மத்திய அமைச்சர் பதிலளித்தார்.

மாநிலங்களவையில் கேட்கப்பட்ட கேள்விக்குப் பதிலளித்து மத்திய ராஜாங்க அணுசக்தித் துறை அமைச்சர் சிவராஜ் பட்டீல் கூறியதாவது:-

அணுமின்சார நிலையம் அமைப்பதற்கு இடம் தேர்ந்தெடுக்கும் கமிட்டி, கூடங்குளத்தையும் அணு மின்சார நிலையம் அமைப்பதற்கான இடங்களில் ஒன்றாகத் தேர்ந்தெடுத்துள்ளது.

தேர்வுக்கமிட்டிகந்துள்ள அந்த அறிக்கையை கூடங்குளத்தில் அணுமின் நிலையம் அமைக்கலாமா என்பது பற்றி மத்திய அரசு பரிசீலித்து வருகிறது.

இவ்வாறு அமைச்சர் சிவராஜ் பட்டீல் எழுத்து மூலம் பதிலளித்தார்.

# மாமல்லபுரம் தேசிய இளைஞர் சுற்றுலா விழா

சென்னை, டிச 20— தேசிய இளைஞர் சுற்றுலா விழா மாமல்லபுரத்தில் இன்று முதல் 22-ந் தேதி வரையில் நடைபெறுகிறது. மத்திய சுற்றுலாத் துறை மாநில அரசின் ஒத்துழைப்புடன் இவ்விழாவிற்கு ஏற்பாடு செய்துள்ளது.

நமது இளைஞர்களிடையே தேசிய ஒருமைப்பாட்டை மேம்படுத்துதல் நாட்டின் வளமிக்க கலாச்சார பாரம்பரியத்தை உணர்த்துதல் போன்றவையே இவ்விழாவின் நோக்கங்களாகும்.

நாட்டின் பல மாநிலங்கள் மற்றும் யூனியன் பிரதேசங்களிலிருந்து 15 விருந்து 30 வயது வரையிலுள்ள சுமார் 500 இளைஞர்கள் இவ்விழாவில் பங்கு கொள்கின்றனர்.

தெற்கு பிராந்தியத்தில் அமைந்துள்ள பல சுற்றுலா மையங்கள் பற்றிய தகவல்கள் இவ்விழாவில் இடம் பெற்றிருக்கும் சுற்றுலாப் பற்றிய கண்காட்சி, திரைபடக்காட்சிகள் ஒலி-ஒளி நிகழ்ச்சிகள் நாட்டியம் இசை நிகழ்ச்சிகள் ஆகியவை இவ்விழாவில் நடக்கப் பெறவுள்ளன.

'இளைஞர் சுற்றுலா' என்ற தலைப்பில் கருத்தரங்கு ஒன்று இம்மாதம் 21-ம் தேதி ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. பங்கு பெறும் இளைஞர்களிடையே விளையாட்டுப் போட்டிகள் ஒன்றும் நடைபெறும்.

நிறைவு நாள் விழாவில் வெற்றி பெறும் இளைஞர்களுக்கு மத்திய பாராளுமன்ற விவகாரம், சுற்றுலாத் துறை அமைச்சர் எச். கே. எல். பகத் பரிசு வழங்குகிறார்.

## மதுரையில் கழக பொதுக்கூட்டம்

மதுரை, டிச. 20— மதுரை நகரில் வடக்கு ஆவணி மூல ஆவணித்தெரு சந்திப்பில் வரும் 22-ந் தேதி மாலை கழகப் பொதுக் கூட்டம் ஜக்கையன் தலைமையில் நடைபெறுகிறது. இக்கூட்டத்தில் நிதி அமைச்சர் டாக்டர் நாவலர், சட்டமன்ற உறுப்பினர்கள் சேடபட்டி முத்தையா, மாரிமுத்து, சிவதாணு, பிரேம்குமார், மேயர் பட்டுராசன், கவிஞர் கிருஷ்ணன் பாலகிருஷ்ணன், ரத்தினவேலு, [illegible], ராமச்சந்திரன், சின்னு, முனியசாமி, சந்தானம், தமிழ்மணி மற்றும் பலர் கலந்து கொண்டு பேசுகின்றனர்.

# தெலுங்கு கங்கை: விரைவில் தீர்வுகாண பிரதமர் ராஜீவ் தீவிரம்

புதுடெல்லி, டிச. 20— தெலுங்கு-கங்கை திட்டத்தில் எழுப்பப்பட்டுள்ள பிரச்சினை விரைவில் தீர்க்கப்பட்டு திட்டம் செயல்படுவதற்கான நடவடிக்கைகளை பிரதமர் ராஜீவ் காந்தி மேற்கொண்டுள்ளார் நாடாளுமன்றத்தில் மத்திய அமைச்சர் சங்கரானந்த் இதைத் தெரிவித்தார்.

தெலுங்கு கங்கை திட்டம் பற்றி நாடாளுமன்றத்தில் விவாதிக்கப்பட்டது. இந்த திட்டம் பற்றி எழுப்பப்பட்டுள்ள தடங்கல்கள் விரைவில் தீர்க்கப்பட வேண்டும் என்றும் திட்டம் துரிதமாக செயல்படுத்தப்பட வேண்டும் என்பதன் அவசியத்தையும் ஆந்திர மாநிலம் மற்றும் தமிழக எம்.பி.க்கள் வலியுறுத்திப் பேசினார்கள்.

தெலுங்கு கங்கை திட்டத்துக்கு விரைவில் அனுமதி அளிக்கவேண்டும் என்றும் அவர்கள் கோரிக்கை விடுத்தனர்.

விவாதத்துக்குப் பதிலளித்த மத்திய நீர்ப்பாசனத்துறை அமைச்சர் சங்கரானந்த் கூறியதாவது:

இத்திட்டம் விரைவில் செயல்படுவதற்கான நடவடிக்கைகளை பிரதமர் ராஜீவ் காந்தி மேற்கொண்டுள்ளார். சில ஆட்சேபங்களை எழுப்பியுள்ள கர்நாடகம், மகாராஷ்டிர முதல் அமைச்சர்களுக்குப் பிரதமர் இது குறித்து கடிதம் எழுதியுள்ளார். ஆந்திர மாநிலம், கர்நாடகம், மகாராஷ்டிரம், ஆகிய மாநிலங்கள் ஒன்றிணைந்து இந்தத் திட்டம் குறித்து ஒரு தீர்மானமான முடிவை மேற்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

ஏற்கனவே ஆந்திர முதல்வர் என். டி. ராமராவ், மராட்டிய முதல்வர் ஆகியோர்களை சந்தித்துப் பேசியிருக்கிறேன். கர்நாடக முதல்வர் ஹெக்டேயையும் விரைவில் சந்திப்பேன். சம்பந்தப்பட்ட மாநிலங்கள் தங்களது உரிமைகளை காத்துக்கொள்வது முறையானதுதான்.

ஆனால் ஒரு சிறிய திட்டம் நிறைவேற்றப்படுவதற்கு சம்பந்தப்பட்ட மாநிலங்கள் ஒருங்கிணைந்து ஒருமனதாக தீர்மானம் செய்ய முன்வர வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு மத்திய அமைச்சர் சங்கரானந்த் கூறினார்.

அவையில் ஆந்திர மாநிலத்தைச் சேர்ந்த உறுப்பினர்களும் கர்நாடக மாநில உறுப்பினர்களும் ஒருவரை யொருவர் குறை கூறி வாக்குப் பேசினர்.

கர்நாடகத்தில் வீணாகப் போகும் தண்ணீரை ஆந்திரம் பயன்படுத்தி கொள்வது நியாயமானது என்று ஆந்திர மாநில உறுப்பினர்கள் கூறினர். 1977ம் ஆண்டு பசவாட் உடன்படிக்கைபடி சென்னைக்கு தரப்பட வேண்டிய 15 டி எம் சி நீரைவிட அதிகமாக ஆந்திர மாநிலம் பயன் படுத்தப் பார்க்கிறது என்று கர்நாடக உறுப்பினர்கள் கூறினர். இந்த விவாதம் சற்று கடுமையாகவும் காரசாரமாகவும் இருந்தது.

ஆந்திரம், கர்நாடகம் ஆகிய இரு மாநிலங்களும் தங்களிடையே உள்ள கருத்து வேற்றுமைகளை களைந்து விட்டு பசவாட் ஒப்பந்தம் செயல்படுவதற்கு ஒத்துழைப்புதர வேண்டும் என்று மற்ற உறுப்பினர்கள் அனைவரும் வலியுறுத்தினார்கள். இந்தப் பிரச்சினையில் மத்திய அரசு விரைவில் முடிவெடுக்கும் என்று மத்திய அமைச்சர் சங்கரானந்த் கூறினார்.

# அமைச்சர் நிகழ்ச்சிகள்

**டாக்டர் நாவலர்**

டிச 22 மதுரை, சின்னாளம்பட்டி
23—சிவகாசி, அருப்புக் கோட்டை
24—மதுரை

**ஆனூர் ஜெகதீசன்**

டிச. 23—கடப்பை, நந்தியால், ஸ்ரீசைலம்
டிச. 24—கடப்பை

**மன்னை அம்பிகாபதி நிகழ்ச்சிகள்**

டிச. 24- சேலம்
27, 28 கும்பகோணம்
29—தஞ்சை

# கர்நாடகா, ஆந்திரா வறட்சியால் பாதிப்பு: மாட்டு தீவன பஞ்சம்

பெங்களூர், டிச 21— கர்நாடக மாநிலத்தில் மாண்டியம், ஆந்திர மாநில எல்லைகளைத் தொட்டுக் கொண்டிருக்கும் மாவட்டங்களில் கடும் வறட்சி ஏற்பட்டிருக்கிறது.

ஆடு மாடுகளுக்குக் கூட புல் முளைக்காத அளவுக்கு வறட்சி ஏற்பட்டிருக்கிறது. இதனால் கால்நடைகள் அழிந்து போகுமோ என்ற அச்சம் ஏற்பட்டிருக்கிறது.

விவசாயிகளால் ஆடு மாடுகளுக்குக் கூட தீவனம் கொடுக்க முடியவில்லை. எனவே கர்நாடக அரசு ஐம்பது இடங்களில் பெரிய கிடங்குகளை ஏற்படுத்துகிறது. ஒவ்வொரு தொழுவத்திலும் ஆயிரம் கால்நடைகள் வீதம் பராமரிக்கப்படும். இதற்காக கர்நாடக அரசு ஒரு கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறது.

சேலம், வடஆற்காடு மாவட்டங்களில் இருந்து மாட்டுத்தீவனங்கள் வழங்க தமிழக அரசு முன் வந்துள்ளது. பஞ்சாப், அரியானா போன்ற மாநிலங்களில் இருந்து வைக்கோல் வாங்குவதற்கு கர்நாடக அரசு தீவிர ஏற்பாடு செய்து இருக்கிறது.

துங்கபத்திரா, கிருஷ்ணா, ஹேமாவதி ஆகிய பெரிய நீர்த்தேக்கங்களின் அருகில் ஆயிரம் ஏக்கரா வீதம் 5 ஆயிரம் ஏக்கராவில் பசும் புற்கள் வளர்க்கவும் ஏற்பாடு செய்து இருக்கிறது.

## மந்திரிகள் பயணம்

வறட்சியால் பாதிக்கப்பட்ட மாவட்டங்களைச் சேர்ந்த அமைச்சர்கள் தங்கள் தங்கள் மாவட்டங்களில் வாரத்திற்கு ஐந்து நாட்கள் சுற்றுப் பயணம் செய்ய வேண்டும். வறட்சி நிவாரணப் பணிகளில் ஈடுபட வேண்டும். எந்த விழாவிலும் கலந்துகொள்ளக் கூடாது என்று கர்நாடக அமைச்சரவை முடிவு செய்து இருக்கிறது.

வறட்சிப் பணிகளை சீரமைக்கவும் ஒருங்கிணைக்கவும் ஒரு தனி அதிகாரி நியமிக்கப்பட்டிருப்பதோடு கூடுதல் தலைமைச் செயலரும் நியமிக்கப்படுகிறார்.

ஒரு டன் வைக்கோலை 15 ரூபாய் முதல் 40 ரூபாய் வரை விலை கொடுத்து வாங்குவதற்கு கர்நாடக அரசு ஒப்புதல் அளித்திருக்கிறது.

காடுகளில் இயற்கையாக வளர்ந்துள்ள புல்லை அறுத்துக் கொண்டு வருவதற்கு கர்நாடக அரசு மேலும் 20 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறது.

## ஆந்திரா வறட்சி

கர்நாடக மாநில எல்லையை ஒட்டியுள்ள ஆந்திர மாவட்டத்தைச் சேர்ந்த அனந்தப்பூர் இந்த மாவட்டத்திலும் குடி தண்ணீருக்குப் பெரும் பஞ்சம் வந்துவிட்டது.

அனந்தப்பூரை அடுத்த நெல்லூர் மாவட்டத்திலும், சித்தூர் மாவட்டத்தின் பல பகுதிகளிலும் அண்மையில் வீசிய புயல் பெருமழையைக் கொண்டு வந்துள்ளது. ஆனால் அடுத்துள்ள அனந்தப்பூர் மாவட்டம் கடும் வறட்சியால் தவிக்கிறது.

அனந்தப்பூர் மாவட்டத்தில் பருவமழை காரணமாக ஆகஸ்ட் மாதத்திற்குள் வழக்கமாக 208 மில்லி மீட்டர் மழை பெய்யும். ஆனால் இந்த ஆண்டு 80 மில்லி மீட்டர் மழை தான் பெய்திருக்கிறது.

நந்த ஆண்டில் இரண்டு முறை விளைச்சல் பாதிக்கப்பட்டதால் பயிர்களுக்கு ஏறத்தாழ 70 கோடி ரூபாய் நஷ்டம். இந்த மாவட்டத்தில் போடப்பட்ட ஆழ்குழாய் கிணறுகளில் பாதிக்கு மேல் செயல்படவில்லை. நிலத்தடி நீர்மட்டம் வெகுவாகக் குறைந்துவிட்டதே இதற்குக் காரணமாகும்.

அனந்தப்பூர் மாவட்டத்தில் நவம்பர், டிசம்பர் மாதங்களில் 270 மில்லி மீட்டர் மழை பெய்ய வேண்டும் இந்த ஆண்டு அந்த மழையும் பெய்யவில்லை.

ஆயிரக்கணக்கான விவசாயத்தொழிலாளர்கள் வேலை தேடி பெங்களூர் ஹைதராபாத் போன்ற நகரங்களுக்கு போய் கொண்டிருக்கிறார்கள்.

# போப் வருகை: பெங்களூரில் ரூ.11 லட்சம் வசூல்

பெங்களூர், டிச. 20— போப்ஜான்பால் வருகையை ஒட்டி பெங்களூரில் ரூபாய் 11 லட்சம் வசூல் செய்யப்பட்டுள்ளது.

1986 பிப்ரவரியில் போப்ஜான்பால் பெங்களூர் வருகிறார் அவரை வரவேற்க இந்த தொகை வசூல் செய்யப்படுகிறது.

பெங்களூரில் உள்ள ரோமன் கத்தோலிக்க வகுப்பினர் இந்த வசூலில் ஈடுபட்டுள்ளனர்.

கத்தோலிக்க சர்ச்சுகளுக்கு நிதி வசூல் குறித்து வேண்டுகோள் விடுக்கப்பட்டது. தொடர்ந்து இந்த வேண்டுகோள் தரப்பட்டு வருகிறது.

ஜனவரியில் இந்த தொகை வசூலாகிவிடும் என்று கருதுகிறார்கள்.

நிதி வசூல் கோரிக்கை ரோமன் கத்தோலிக் பிரிவினர் இடையே அவ்வளவு மகிழ்ச்சியை அளிக்கவில்லையாம்.

இதற்கு அவர்கள் சொல்லும் காரணம் போப் ஜான்பால் பெங்களூரில் தங்கப் போவது 2 மணி நேரம் தான். இந்த 2 மணி நேர விழாவுக்காக ரூபாய் 6-11 லட்சம் செலவிடுவது என்பது சரியானதா என்று அவர்கள் கேட்கிறார்களாம்.

## மாயமாய் மறையுமோ?

இப்படி வசூல் செய்யும் பணத்தில் ஒரு பகுதி போப் வருவதற்குள் மாயமாய் மறைந்து விடுமோ என்றும் ஐயப்படுகிறார்கள்.

போப் பெங்களூர் காலை வருகிறார். பெங்களூருக்கு இல்லையே என்ற அதிருப்தியும் அவர்களிடம் இருக்கிறது.

பெங்களூருக்கும் போப் ஆண்டவர் வருவதாக இருந்ததாம் ஆனால் அங்கு இருந்த கருத்து வேறுபாடுகளால் பெங்களூர் விஜயம் ரத்து செய்யப்பட்டு விட்டதாகவும் சொல்கிறார்கள். எப்படியோ பெங்களூர் கத்தோலிக்க பிரிவினர் மகிழ்ச்சியாக இல்லை.

போப் வரும்போது பாதுகாப்பை முன்னிட்டு காமிரா குடை, பைகள் எதுவும் எடுத்துச் செல்லவும் தடை இருக்குமாம்.

இது குறித்து யாருக்கும் எதுவும் புரியவில்லை என்றும் சொல்லப்படுகிறது.

# சுங்க அதிகாரி மனைவிக்கு ரூ 40 லட்சம் மதிப்புள்ள பங்களா

பம்பாய், டிச 20— சுங்க இலாகாவில் வேலை பார்க்கும் ஒரு அதிகாரியின் மனைவி ரூபாய் 40 லட்சம் மதிப்புள்ள மூன்றடுக்கு மாளிகை கட்டியுள்ளார்.

மற்றொரு அதிகாரி பத்து லட்ச ரூபாயை வங்கியில் ரகசிய டெபாசிட்டாகப் போட்டு வைத்திருக்கிறார்.

மத்திய புலனாய்வு துறை அதிகாரிகள் சுங்க அதிகாரிகள் வீடுகளில் சோதனை நடத்தினர். லஞ்ச ஊழல் மூலம் அந்த பணத்தை அவர்கள் சேர்த்திருப்பதைக் கண்டுபிடித்தனர்.

மற்றொரு அதிகாரி வீட்டில் நடத்திய சோதனையில் தங்க - வைர நகைகள் கைப்பற்றப்பட்டன. அவர் நிலம் வாங்கி விற்ற கணக்கு விவரங்களும் மற்றும் அவர் வைத்திருந்த ரூபாய் 79 ஆயிரமும் கைப்பற்றப்பட்டன.

ரூபாய் 40 லட்சம் பங்களா வாங்கிய அதிகாரி மனைவியிடம் தொடர்ந்து விசாரணை நடந்தது. வெளிநாடு சென்ற ஒரு பெண்ணிடமிருந்து அந்த பங்களாவை வாங்கியதாக அவர் தெரிவித்தார். 40 ஆயிரம் ரூபாய்க்கு வாங்கியதாக அவர் கணக்கு கொடுத்திருக்கிறார். ஆனால் அந்த மாளிகையின் மதிப்பு ரூ 40 லட்சம்.

டெல்லியிலும் பல அதிகாரிகள் வீட்டில் சி.பி.ஐ. சோதனை நடத்துகிறது.

மத்திய சட்ட இலாகா கூட்டு செயலாளர் பகதூர் வீட்டில் சோதனை நடத்தியதில் அவர் தனது நியாயமான வருமானத்துக்கு மேல் சொத்து சேர்த்திருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. அவருக்கு தற்போது 46 லட்சத்து 50 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள சொத்துள்ளது. இது தவிர வெளிநாட்டு பணம் சொகுசு கார், பல வீடுமனைகள் ஆகியவையும் உள்ளன.

அந்த சொத்துக்களை ஜப்தி செய்ய நீதிமன்றம் உத்தரவிட்டுள்ளது.

**அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக எம். ஜி. ஆர். இளைஞர் அணியினர் கவனத்திற்கு...**

கழக பொதுச்செயலாளர் அவர்களால் 7-6-85 அன்று வெளியிடப்பட்ட தலைமைக் கழக அறிவிப்பின்படி எம். ஜி. ஆர். இளைஞர் அணியினருக்கு என்று புதிய உறுப்பினர் படிவங்களை இளைஞர் அணியினர் பல்வேறு பகுதிகளிலிருந்து பூர்த்தி செய்து அனுப்பியுள்ளார்கள்.

7-6-85 அறிவிப்புக்கு பின்னர் தலைமைக் கழகத்தால் வழங்கப்படுகின்ற உறுப்பினர் படிவங்களில் பூர்த்தி செய்து அனுப்பியவர்கள் மட்டுமே கழக உறுப்பினர்கள் ஆவார்கள். இவர்களுக்கு மட்டும் தான் உறுப்பினர் கார்டுகள் வழங்கப்படும்.

உறுப்பினர்கள் சேர்க்கும் பணியினை அடிப்படை வேலையாகவும், அவசர வேலையாகவும் கருதி மாவட்ட நிர்வாகிகளும், இளைஞர் அணியினரும் செயல்பட வேண்டுகிறேன்.

ஏற்கனவே புதிய இளைஞர் அணி உறுப்பினர் படிவங்களைப் பெற்றுச் சென்றவர்கள் பூர்த்தி செய்து தலைமைக் கழகத்திற்கு அனுப்பி வைத்திட வேண்டுகிறேன். புதிய உறுப்பினர் படிவங்கள் இதுவரை பெறாதவர்கள் தபால் மூலமோ, நேரிலோ தலைமைக் கழகத்திலிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

இவண்

ஜே. சி. டி. பிரபாகரன்,
செயலாளர்

சென்னை—14,
[illegible]0-12-'85.

**பா. து. ந. எண் பி1/1954-85**

**சென்னை மாநகராட்சி பாலங்கள் துறை**

நாள் 19-12-85

## ஒப்ப அறிவிப்பு

மூடி அரக்கு முத்திரையிடப்பட்ட ஒப்பங்கள் கீழ் கண்ட பணிக்காக சென்னை மாநகராட்சியின் சாலை பணிகளுக்காக பதிவுசெய்த ஒப்பந்தக்காரர்களிடமிருந்து சென்னை மாநகராட்சி மேற்பார்வை பொறியாளர்-பாலங்கள் அவர்களால் 10-1-86 தேதி பிற்பகல் 2-30 மணிவரை பெறப்பட்டு அதே நாளில் பிற்பகல் 2-30 மணிக்கு மேற்பார்வைப் பொறியாளர் (பாலங்கள்) அவர்களால் திறக்கப்படும். உறையின் மீது பணியின் பெயரைக் குறிப்பிட வேண்டும்.

ஒப்பப்படிவத்துடன் பணியின் எதிரே குறிப்பிடப்பட்டுள்ள ஒப்ப வைப்புத் தொகைக்காக சென்னை மாநகராட்சியின் கருவூல செலுத்துச் சீட்டோ அல்லது அரசுடைமையாக்கப்பட்ட அல்லது அங்கீகரிக்கப்பட்ட வங்கிகளில் இருந்து ஆணையர்/சென்னை மாநகராட்சி அவர்களின் பதவிப் பெயரில் பெறப்பெற்ற பண உறையோ இணைத்தல் வேண்டும். வேறு முகாந்திரமாக செலுத்தும் ஒப்ப வைப்புத் தொகை ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது. ஒப்ப வைப்புத் தொகை இணைக்கப்படாத ஒப்பங்கள் கண்டிப்பாக நிராகரிக்கப்படும்.

பணியின் பெயர்: சூளைமேடு தாம்போதி பழுது பார்த்தல். கோட்டம் 79.

வேலையின் தோராய மதிப்பீடு ரூ. 5,40,000.

ஒப்ப வைப்புத் தொகை ரூ 5,400.

ஒப்ப நமூனா விலை ரூ 100

பதிவு செய்துள்ள ஒப்பந்தக்காரர் நிலை IA மற்றும் அதற்கு மேல்நிலை

ஒப்பந்த நிபந்தனைகள் அடங்கிய ஒப்ப படிவங்களை சென்னை மாநகராட்சி விசாரணை அலுவலகத்தில் உரிய கட்டணத்தைச் செலுத்தி பெற்றுக் கொள்ளலாம்.

ஒப்ப படிவங்கள் விற்பனை 8-1-86 பகல் 2.00 மணிக்கு நிறுத்தப்படும்.

க.ர. மனோகரன், பி.இ
மேற்பார்வைப் பொறியாளர்/
(பாலங்கள்)

**பா. து. ந. எண் பி1/1933-8[illegible]**

**சென்னை மாநகராட்சி பாலங்கள் துறை**

நாள் 17-12-85

## ஒப்ப அறிவிப்பு

மூடி அரக்கு முத்திரையிடப்பட்ட ஒப்பங்கள் கீழ்க்கண்ட பணிக்காக சென்னை மாநகராட்சியில் சாலைபணிகளுக்காக பதிவு செய்த ஒப்பந்தக்காரர்களிடமிருந்து சென்னை மாநகராட்சி மேற்பார்வை பொறியாளர் / பாலங்கள் அவர்களால் 8-1-86 தேதி பிற்பகல் 2.30 மணிவரை பெறப்பட்டு, அதே நாளில் பிற்பகல் 2.30 மணிக்கு மேற்பார்வைப் பொறியாளர் (பாலங்கள்) அவர்களால் திறக்கப்படும்.

உறையின் மீது பணியின் பெயரை குறிப்பிட வேண்டும். ஒப்ப படிவத்துடன் பணியின் எதிரே குறிப்பிடப்பட்டுள்ள ஒப்ப வைப்புத் தொகைக்காக சென்னை மாநகராட்சியின் கருவூல செலுத்துச்சீட்டோ அல்லது அரசுடைமையாக்கப்பட்ட அல்லது அங்கீகரிக்கப்பட்ட வங்கிகளில் இருந்து ஆணையர்/சென்னை மாநகராட்சி அவர்களின் பதவிப் பெயரில் பெறப் பெற்ற பண உறையோ இணைத்தல் வேண்டும். வேறுமுகாந்திரமாக செலுத்தும் ஒப்ப வைப்புத் தொகை ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது. ஒப்ப வைப்புத் தொகை இணைக்கப்படாத ஒப்பங்கள் கண்டிப்பாக நிராகரிக்கப்படும்.

பணியின் பெயர் புதிய திரு. வி. க. பாலத்தின் கீழ்ப்பக்கம் கனெட்டிங் வேலை செய்தல் கோட்டம் 135

வேலையின் தோராய மதிப்பீடு ரூ 4,00,000

ஒப்ப வைப்புத் தொகை ரூபாய் 4,000

ஒப்ப நமூனா விலை ரூபாய் 100

பதிவு செய்துள்ள ஒப்பந்தக்காரர் நிலை II மற்றும் அதற்கு மேல் நிலை

ஒப்பந்த நிபந்தனைகள் அடங்கிய ஒப்ப படிவங்களை சென்னை மாநகராட்சி விசாரணை அலுவலகத்தில் உரிய கட்டணத்தை செலுத்தி பெற்றுக்கொள்ளலாம்.

ஒப்ப படிவங்கள் விற்பனை 6-1-86 பகல் 2-00 மணிக்கு நிறுத்தப்படும்.

க.ர. மனோகரன் பி.இ.
மேற்பார்வை பொறியாளர்
(பாலங்கள்)

**Institute Of Correspondence Education**
**University Of Madras**

## P. G. Examination Notification May 1986

1. MAY 1986 EXAMINATION

The next examination for candidates admitted to M.A., and M.Com., courses in the Institute of Correspondence Education will commence in the second week of May 1986.

2. PROCEDURE FOR OBTAINING EXAMINATION APPLICATION FORM FOR MAY 1986 EXAMINATION

For candidates admmitted to Post-Graduate Courses during 1985-86 and 1984-85 and are due to appear for the First and Second year Examination respectively in May 1986, examination application forms will be sent by the Institute itself individually by post.

Candidates admitted to the P.G. courses (i) in 1981-82 & 1982-83 and (ii) in 1983-84 but did not sit for October 1985 Examination, and wishing to appear for the P.G. Examinations, may obtain the application form on request giving the following particulars.

(i) Name and Address of the Candidate
(ii) Enrolment No. and year of Admission

Requests without these details will not be attended to

Requisitions should be addressed to Thiru. K. Ilavaperumal B.A., Assistant Registrar (Exams) Institute of Correspondence Education, University of Madras, Madras 600 005 along with an unstamped self Addressed envelope of size 28 cmX 13 cm

3. LAST DATE FOR FILLED IN EXAMINATION APPLICATION FORMS TO REACH THE INSTITUTE.

The last date for the filled-in examination application form to reach the Institute is as follows:

| | Last date without Penalty | Last date with Penalty |
|---|---|---|
| a) For candidates who were admitted to M.A/M.Com courses during 1981-82 1982-83 and 1985-86 | 31-1-1986 | 10-2-1986 |
| b) For candidates who were admitted to the M.A/M.Com courses during 1983-84 and 1984-85 | 28-2-1986 | 11-3-1986 |

A separate notification will be made with regard to B.A/B.Sc., /B.Com Examinations to be held in May 1986 as also with regard to the re-examination of the November 1985 examination that were postponed.

**Dr. M. Shanmugham**
DIRECTOR

Madras-5
Date:

## கல்லூரி முதல்வர் கொலை, மாணவருக்கு ஆயுள் சிறை

நாகபுரி, டிச. 20— நாகபுரியில் உள்ள சிதர கலா மகா வித்யாலயா கல்லூரி முதல்வர் டாக்டர் லோகண்டே இவரை கொலை செய்ததாக அந்த கல்லூரி மாணவர் தி பக்வான்கடே மீது வழக்கு தொடரப்பட்டது. அந்த மாணவருக்கு ஆயுள் தண்டனை விதித்து நாகபுரி செசன்சு நீதிபதி தீர்ப்பு கூறினார்.






Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, MADRAS 600 029.


# வரி ஏய்ப்போரை விசாரித்து தண்டிக்க விசேஷ கோர்ட்டுகள்

## மத்திய அரசின் புதிய வரிக்கொள்கை அறிவிப்பு

**புதுடெல்லி, டிச. 20- வரி ஏய்ப்போரை விசாரித்துத் தண்டிக்க விசேஷ கோர்ட்டுகள் நிறுவப்படும் என மத்திய நிதி அமைச்சர் வி. பி. சிங் கூறினார்.**

மத்திய அரசின் நீண்டகால வரிவிதிப்பு கொள்கை பற்றிய அறிக்கையை மக்கள் சபையில் மத்திய நிதியமைச்சர் வி.பி.சிங் தாக்கல் செய்தார்.

அந்த அறிக்கையில் உள்ள முக்கியமான விவரங்கள் வருமாறு:—

தற்போது உள்ள தனிநபர் வருமான வரி விகிதத்தில் அடுத்த ஐந்து ஆண்டுகளுக்கு எந்த மாற்றமும் இருக்காது.

இதேபோல் செல்வ வரி விகிதமும் அடுத்த ஐந்தாண்டுகளுக்கு மாற்றப்பட மாட்டாது.

எனினும் போர் போன்ற அவசர நிலை ஏற்படும்போது கூடுதலாக வருவாயை பெருக்க வருமான வரி உள்ளிட்ட வரிகளில் அரசு சர்சார்ஜ் விதிக்கலாம். ஆனால் இது குறுகிய காலமானதாகவே இருக்கும்.

புதிய நிதிக்கொள்கை மூலம் ஆண்டுதோறும் எதிர்பார்க்கப்படும் பட்ஜெட் ரகசியங்கள் அகற்றப்பட்டு விடும்.

இதனால் விலைவாசி உள்ளிட்ட அனைத்திலும் ஸ்திரத்தன்மை ஏற்படும்.

பட்ஜெட் சமயத்தில் பொருட்களைப் பதுக்குவதும் தடுக்கப்படும்.

7-வது ஐந்தாண்டுத் திட்டத்தை ஒட்டியதாக (1985—1990) இந்த வரிக்கொள்கை இருக்கும்.

இவ்வாறு அந்த அறிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

அறிக்கையைத் தாக்கல் செய்து சபையில் நிதியமைச்சர் வி.பி.சிங் கூறியதாவது:

சமூகத்தில் சிறந்த நிலையில் உள்ளவர்கள் தான் வரி ஏய்ப்பு செய்து வருகிறார்கள்.

வரிஏய்ப்பு செய்பவர்களை கண்டுபிடித்து அவர்கள் மீது கடும் நடவடிக்கை எடுப்பதே புதிய வரிக்கொள்கையின் முக்கிய நோக்கமாகும்.

நிர்வாகச் செலவைக் குறைக்க உயர்திகார கமிட்டி ஒன்று அமைக்கப்பட்டுள்ளது.

### டெபாசிட் திட்டம்

சேமிப்பை ஊக்கப்படுத்த புதிய டெபாசிட் திட்டம் ஒன்றை அமல்படுத்துவது பற்றி அரசு பரிசீலித்து வருகிறது.

நன்கொடை வரி தொடர்ந்து நீடிக்கும்.

வரி ஏய்ப்போர் மீது வழக்கு தொடர்ந்து தண்டிக்க சுங்க வரிச்சட்டம் தங்கக்கட்டுப்பாடு சட்டம் போன்றவை நேரடிச் சட்டத்தில் சேர்க்கப்படும்.

வரி ஏய்ப்பைத் தடுக்க தொடர்ந்து சோதனைகள் மேற்கொள்ளப்படும்.

பொருளாதாரக் குற்றங்களைப் புரிந்தோர் மீதான வழக்குகளை விசாரிக்க விசேஷக் கோர்ட்டுகள் அமைக்கப்படும்.

இவ்வாறு அமைச்சர் வி. பி. சிங் கூறினார்.



## பெங்களூர் போல ஐதராபாத் நகரிலும் குடிநீர் தட்டுப்பாடு

ஐதராபாத், டிச. 20- ஆந்திர மாநிலத்தலைநகரான ஐதராபாத்தில் கடும் வறட்சி நிலவுகிறது. குடிநீருக்கும் தட்டுப்பாடு ஏற்பட்டுள்ளது.

கர்நாடக மாநிலத்தில் கடும் வறட்சி ஏற்பட்டு, பெங்களூர் நகரில் குடிநீர் தட்டுப்பாடு உள்ளது.

இப்போது ஐதராபாத் நகரம் வறட்சியின் பிடியில் சிக்கியுள்ளது.

ஐதராபாத்தில் இப்போதுள்ள குடிநீர்பஞ்சம் இன்னும் மூன்று மாதத்தில் (கோடை சீசனில்) மேலும் கடுமையாகும் என்று அஞ்சப்படுகிறது. குடிநீருக்கு ரேஷன் கொண்டு வர ஆந்திர அரசு திட்டமிட்டுள்ளது.

வறட்சி காரணமாக கோடை விடுமுறையை முன் கூட்டியே விடுவது என்று உஸ்மானியா பல்கலைக் கழகமும், இதர கல்வி நிறுவனங்களும் முடிவு செய்துள்ளன.

தற்போது ஐதராபாத்தின் பல்வேறு பகுதிகளுக்கு லாரிகளில் குடிநீர் சப்ளை செய்யப்படுகின்றது.

புதிய குடிநீர் இணைப்பு வழங்கப்படுவதில்லை.

# இலங்கைத் தமிழர் அகதிகளை திருப்பி அனுப்பமாட்டோம்

### மத்திய அரசு அறிவிப்பு

புதுடெல்லி, டிச. 20— இலங்கையிலிருந்து தமிழகத்திற்கு அகதிகளாக வந்துள்ள தமிழர்களை திருப்பி அனுப்பமாட்டோம். அவர்கள் பாதுகாப்பாகவும், கண்ணியமாகவும் வாழும் நிலை ஏற்பட்ட பிறகு இலங்கை திரும்பலாம் என்று மத்திய அமைச்சர் பி. ஆர். பகத் கூறினார்.

இலங்கையில் விடுதலைப் புலிகளை ஒடுக்குவதாக கூறி அப்பாவி தமிழர்களை சிங்கள ராணுவம் கொன்று குவித்து வருகிறது. தமிழர்களின் சொத்துக்கள் சூறையாடப்படுகின்றன.

தமிழ் பெண்கள் பலர் கற்பழிக்கப்படுகிறார்கள்.

இதனால் ஆயிரக்கணக்கான இலங்கைத் தமிழர்கள் அகதிகளாக தமிழ்நாட்டிற்கு வந்துள்ளனர்.

இவர்கள் மீண்டும் இலங்கைக்கு திருப்பி அனுப்படுவார்கள் என்று டெல்லியின்று இலங்கை அரசு தெரிவித்துள்ளதா என்று ராஜ்ய சபையில் டாக்டர் எஸ். எஸ். மொகபத்ரா கேள்வி கேட்டார்.

அதற்கு மத்திய வெளிநாட்டு இலாகா மந்திரி பி.ஆர். பகத் பதிலளித்தார்.

இலங்கைத் தமிழர்களை திருப்பி அனுப்பும் திட்டம் ஏதும் இல்லை. அவர்கள் பாதுகாப்பாகவும், கண்ணியமாகவும் திரும்பும் சூழ்நிலையை இலங்கையில் உண்டாக்க வேண்டும் என்று மீண்டும் வற்புறுத்தி வருகிறோம்.

இலங்கையில் எராவூர் என்னும் இடத்தில் ராணுவ முகாம் அமைக்கப்பட்டதால் அங்குள்ள தமிழர்கள் வீடுகளை காலி செய்து விட்டு செல்வதாக தமிழ் தகவல் நிலையம் தெரிவித்துள்ளது.

ராணுவ முகாம் அமைக்கப்படுவதை எதிர்த்து அரசு கட்டிடங்களை விடுதலைப் புலிகள் வெடிகுண்டு வீசி தகர்த்தனர்.

## அன்னை தெரசாவுக்குக் கண் ஆப்ரேஷன்

நியூயார்க், டிச. 20— அன்னை தெரசா அமெரிக்கா சென்று அதிபர் ரீகனை சந்தித்தார். பின்னர் நியூயார்க் மருத்துவமனையில் அவரது இடது கண்ணில் ஆபரேஷன் நடந்தது. சிகிச்சைக்குப்பின் அவர் ஆஸ்பத்திரியிலிருந்து நலம் பெற்று திரும்பினார்.

## வரி ஏய்ப்பை கண்டுபிடித்த அதிகாரிக்கு ரூ. 1 லட்சம்

சென்னை, டிச. 20— மத்திய ஆயத்தீர்வைகளை செலுத்தாமல் இருந்தவர்களை கண்டுபிடித்ததற்காக கொச்சியை சேர்ந்த ஆயத்தீர்வை ஏய்ப்புதடுப்பு இயக்குனரகத்தைச் சேர்ந்த உதவி இயக்குனர் கே.எம். நாயருக்கு 1 லட்சத்து 30 ஆயிரம் ரூபாய் ரொக்கப் பரிசு வழங்கப்பட்டது.

மத்திய ஆயத் தீர்வை ஏய்ப்பு வழக்கில் ஒருலட்சம் ரூபாய்க்கு மேல் ரொக்கப் பரிசு அளிக்கப்படுவது இதுவே முதல்முறையாகும்.

கேரளாவிலுள்ள இரண்டு பெரிய நிறுவனங்கள் ஆயத்தீர்வை ஏய்ப்பில் ஈடுபட்டிருந்தன. இந்நிறுவனங்கள் சிறு தொழில் நிறுவனங்களின் பெயரில் வரிவிலக்கு பெற்று வந்தன. இந்த நிறுவனங்களில் கண்காணிப்பு நடவடிக்கை மேற்கொண்டபோது. 2 கோடி ரூபாய் வரி ஏய்ப்பு கண்டுபிடிக்கப்பட்டது. இதன் விளைவாக நூற்றுக்கணக்கான ரப்பர் நூல் உற்பத்தி செய்யும் சிறுதொழில் நிறுவனங்கள் முறையாக ஆயத்தீர்வையை செலுத்தி வருகின்றன.

தற்போதுள்ள பரிசு திட்டத்தின் கீழ் ஆயத்தீர்வை ஏய்ப்பை கண்டுபிடித்தவர்களுக்கு ஆயத்தீர்வை செலுத்த வேண்டிய தொகையில் 20 சதவீதம் ரொக்கப் பரிசாக வழங்கப்படும். ஆயத்தீர்வை ஏய்ப்பை கண்டுபிடித்தவருக்கு அவரது ரொக்கப் பரிசில் 25 சதவிதம் முன்பணமாக வழங்கப்படும்.

## டெல்லி மறியல்: 14 ஆயிரம் பேர் கைது

புதுடெல்லி, டிச 20— டெல்லியில் நடந்த மறியல் போராட்டத்தையொட்டி 14 ஆயிரம் பேர் கைது செய்யப்பட்டனர்.

பஞ்சாப் ஒப்பந்தத்தை எதிர்த்தும், சண்டிகாரை பஞ்சாபுக்குக் கொடுத்ததை கண்டித்தும் நாடாளுமன்றம் முன் மறியல் நடத்தப் போவதாக அரியானா எதிர்க்கட்சிகள் அறிவித்திருந்தன. நாடாளுமன்றம் முன்பாக 14 ஆயிரம் பேர் திரண்டு விட்டனர். லோகதளத்தலைவர் தேவிலால், அரியானா எதிர்க்கட்சி தலைவர் மங்கள் செய்ன் ஆகியோர் மறியலுக்கு வந்திருந்தனர்.

அவர்களை கலைந்து போகுமாறு போலீசார் எச்சரித்தனர். கண்ணீர் புகை குண்டுகள் வெடிக்கப்பட்டன. தடியடியும் நடத்தப்பட்டது.

கலைந்து போகாததால் 14 ஆயிரம் பேரை போலீசார் கைது செய்தனர். தேவிலாலும் கைது செய்யப்பட்டார்.

250 பஸ்களில் அவர்களை போலீசார் டெல்லியில் சத்திரசால் மைதானத்துக்கு ஏற்றிச் சென்றனர்.

பின்னர் அவர்கள் அனைவரும் விடுதலை செய்யப்பட்டனர்.

கலவரத்தில் 10 பஸ்கள் சேதம் அடைந்தன. வன்முறையில் ஈடுபட்டதாக 20 பேர் மீது வழக்கு நடைபெறுகிறது.

முன்னதாக நடந்த பேரணியில் 70 ஆயிரம் பேர் கலந்து கொண்டனர்.

## சிவில்சர்வீஸ் தேர்வு எழுத வயது வரம்பு நிர்ணயம்

புதுடெல்லி, டிச. 20— 1986-ம் ஆண்டு நடைபெறவிருக்கும் சிவில் சர்வீஸ் தேர்வு எழுதுவதற்கான உச்ச வயது வரம்பு 26 என்று மத்திய அரசு பணியாளர் தேர்வாணையம் அறிவித்துள்ளது. வரும் ஆண்டுகளிலும் அவ்வுச்ச வயது வரம்பே பின்பற்றப்படும்.

சில பத்திரிகைகளில் மத்திய அரசு பணியாளர் தேர்வாணையம் உச்சவயது வரம்பு 28 என்று செய்தி வெளியிட்டுள்ளது தவறானது என்று அறிவிக்கப்படுகிறது.

குறைந்தபட்ச வயது 21 ஆண்டுகள் நிறைந்திருக்க வேண்டும். உச்சவயதுவரம்பு 1986 ஆகஸ்டு மாத முதல் தேதியன்று 26 ஆக இருக்க வேண்டும் என்றும் தேர்வாணையம் குறிப்பிடுகின்றது. விண்ணப்பம் சமர்ப்பிக்க கடைசி தேதி வரும் 20-ம் தேதியாகும்.

## இலங்கையில் 5 லட்சம் தோட்டத் தொழிலாளர்கள் வேலைநிறுத்தம்

கொழும்பு, டிச. 20— இலங்கையில் 5 லட்சம் தோட்டத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்வார்கள் என்று தொண்டமான் அறிவித்தார்.

இலங்கை ஊரகத்தொழில் அமைச்சர் தொண்டமான், தோட்டத் தொழிலாளர் சங்கத் தலைவராகவும் இருக்கிறார். இந்த தோட்டத் தொழிலாளர்கள் தமிழர்கள் 5 லட்சம் பேர் அவரது சங்கத்தில் உறுப்பினர்களாக இருக்கிறார்கள்.

தோட்டத் தொழிலாளர்கள் நிலைமை மோசமாக இருக்கிறது அவர்களுக்கு நியாயமான சம்பளம் வேண்டும். வேலை நேரம் மாற்றி அமைக்கப்பட வேண்டும் என்று கூறி வேலை நிறுத்த அறிவிப்பை வெளியிட்டுள்ளார் தொண்டமான் தங்கள் கோரிக்கைகள் நிறைவேறாவிட்டால் 5 லட்சம் தோட்டத்தொழிலாளர்களும் ஜனவரி 14 (பொங்கல்) முதல் 3 மாதங்களுக்கு வேலை செய்யமாட்டார்கள் என்று தொண்டமான் அறிவித்தார்.

## கனடாவுக்கு பிரதமர் ராஜீவ் காந்தி பாராட்டு

புதுடெல்லி. டிச 20— தீவிரவாதிகளை ஒடுக்குவதில் கனடா அரசு செயல்படும் முறைகள் குறித்து பிரதமர் ராஜீவ் பாராட்டு தெரிவித்துள்ளார். கனடா வெளியுறவு செயலாளர் சார்லஸ் ஜோசப் கிளார்க்குடன் பிரதமர் ராஜீவ் பேசுகையிலேயே மேற்கண்ட பாராட்டைத் தெரிவித்தார்.

கனடா தீவிரவாதிகளை ஒடுக்கும் நடவடிக்கையை எதிர்காலத்திலும் தொடர்ந்து செய்யும் என்று தான் நம்புவதாகவும் பிரதமர் குறிப்பிட்டார்.

கனடா பிரதமர் சார்பில் கிளார்க் பிரதமர் ராஜீவுக்கு கனடாவுக்கு வருமாறு அழைப்பு விடுத்தார். பிரதமர் இதை ஏற்றுக் கொண்டார்.

## யானைக் கூட்டம் மாயமாய் மறைந்தது

பெங்களூர், டிச. 20— கர்நாடகத்தில் குடகு மலைப்பகுதியில் இருந்த யானைகள் எங்கோ தப்பி ஓடி விட்டன.

குடகு மலைப்பகுதியில் உள்ள யானைகள் அந்த வட்டாரத்தில் விவசாயத்தை நாசப்படுத்தி விடுவதால் அவற்றை நாகர்ஹோலி தேசிய பூங்காவில் கொண்டு போய் விட முடிவு செய்தனர்.

இதைத் தொடர்ந்து 14 யானைகள் கொண்ட அந்த கூட்டத்தை லாரியில் ஏற்றி நாகர்ஹோலிக்கு கொண்டு செல்ல ஏற்பாடு நடந்தது.

ஆனால் அந்த யானைகள் ஒரு மரத்தை வேரோடு பிடுங்கி யானைகள் வயலுக்கு போகாதபடி தடுப்பதற்காக போடப்பட்டிருந்த மின்வேலியில் தாக்கி வீசியது.

பின்னர் 14 யானைகளும் குடகு பகுதியிலிருந்து எங்கோ தப்பி விட்டன. அவற்றை ஏற்றி வர அனுப்பப்பட்ட லாரிகள் காலியாக திரும்பி வந்தன.

## மத்திய பொதுப்பணித் துறை
சென்னை

செயற் பொறியாளர் சென்னை மத்திய டிவிஷன் எண் 1 அவர்கள் பாண்டிச்சேரி ஜிப்மரில் உள்ள கல்லூரி மருத்துவமனையின் புற நோயாளிகள் துறை பிளாக் மற்றும் இதர குடியிருப்பு அல்லாத கட்டிடங்களில் சேவைகளுக்கான மூடி முத்திரையிட்ட இனவாரி ஒப்பந்த புள்ளிகளை அங்கீகாரம் பதிவு பெற்ற ஒப்பந்தகாரர்களிடமிருந்து 28-12-85 அன்று பிற்பகல் 3 மணிவரை வரவேற்கிறார். உப தலைப்பு மருத்துவமனையில் உள்ள பணிமனை மற்றும் ID வார்டில் உள்ள எஃகு தண்ணீர் தொட்டியை மாற்றி Masonry தண்ணீர்தொட்டியாக கட்டுதல் மேலும் பகுதியில் உள்ள மாடிப்படிகளில அலுமினியம் முனைத் துண்டுகள் அமைத்தல் மற்றும் கதவுகளுக்கு Kich தகடுகள் அமைத்தல் மதிப்பீட்டுச் செலவு ரூபாய் 1,33,593, டெண்டர் பாரங்களை இந்த அலுவலகத்திலிருந்து ரூபாய் 100 மற்றும் விற்பனை வரிகள் செலுத்தி 26-12-85 வரையில் பெற்றுக்கொள்ளலாம்.

டிஏவிபி 635/(8(4)85

## விருதுநகர் குடிநீர் திட்டம்: அமைச்சர் காளிமுத்து பார்த்தார்

விருது நகர், டிச. 20 — காமராசர் மாவட்டம் விருது நகரில் கட்டப்பட்டு வரும் புதிய மாவட்ட ஆட்சியர் வளாகத்திற்கான குடிநீர் திட்டம் ரூபாய் 25 லட்சம் செலவில் அமல்படுத்தப்பட்டு வருகிறது. இப்பெரிய குடிநீர்த் திட்டத்தை வேளாண்மைத் துறை அமைச்சர் காளிமுத்து பார்வையிட்டார்.

அமைச்சருடன் கோட்டாட்சியர்கள் கிருஷ்ணமூர்த்தி, தாலூக் கிருஷ்ண மூர்த்தி, கா.சி. பிச்சை மற்றும் குடிநீர் வடிகால் வாரிய அதிகாரிகள் கலந்து கொண்டனர்.

ஆங்காங்கே பொது மக்கள் அமைச்சரிடம் குடிநீர் பிரச்சினை குறித்து மனுக்கள் அளித்தனர். அம்மனுக்களின் மீது உடனடியாக நடவடிக்கை மேற்கொண்டு அறிக்கை தருமாறு அதிகாரிகளைக் கேட்டுக் கொண்டார். சுற்றுப் பயணத்தில் அமைச்சருடன் செய்தி மக்கள் தொடர்பு அலுவல தினதயாளன் உதவி மக்கள் தொடர்பு அலுவலர் சிரவணன் ஆகியோர் கலந்து கொண்டனர்.

### "போர் நடத்தமாட்டோம்"

# இந்தியா - பாகிஸ்தான் சமாதான ஒப்பந்தம்

புதுடெல்லி, டிச. 20- யுத்தத்தில் ஈடுபட மாட்டோம் என்று இந்தியாவும் பாகிஸ்தானும் சமாதான உடன்படிக்கை செய்து கொள்ள முடிவு எடுத்துள்ளன.

கடந்த செவ்வாயன்று பிரதமர் ராஜீவ் காந்தியும் பாகிஸ்தான் அதிபர் ஜியா உல்-ஹக்கும் டெல்லியில் சந்தித்துப் பேசினார்கள். அப்போது இந்தியாவும் பாகிஸ்தானும் சமாதானம் நட்புறவு ஒப்பந்தத்தில் கையெழுத்திடுவது என முடிவு எடுத்தனர்.

### வரலாற்று சிறப்புள்ளது

இந்த ஒப்பந்தமானது இந்தியத் துணைக்கண்டத்தின் வரலாற்றுச் சிறப்பு மிக்கதாக இருக்கும் என்று கருதப்படுகிறது.

பிரதமர் ராஜீவ் காந்தி ஏப்ரல் மாத வாக்கில் பாகிஸ்தான் செல்ல இருக்கிறார். அந்த நேரத்தில் மத்திய பட்ஜெட் எல்லாம் தாக்கல் செய்து பணிகள் முடிந்திருக்கும்.

பாகிஸ்தான் செல்லும் ராஜீவ் காந்தி, அங்கு சமாதான ஒப்பந்தத்தில் கையெழுத்திடுவார். "யுத்தம் நடத்த மாட்டோம், ஒருவர் நிலத்தை மற்றவர் ஆக்கிரமிக்க மாட்டோம்" என்ற அடிப்படையில் ஒப்பந்தம் இருக்கும்.

இதுபற்றி ராஜீவும் ஜியா-உல்-ஹக்கும் முடிவு எடுத்துள்ளனர்.

### பாகிஸ்தான் பயணம்

இந்திய வெளிவிவகார செயலாளர் ரமேஷ் பண்டாரியும், பாகிஸ்தான் வெளிவிவகார செயலாளர் நியாஸும் பேச்சு நடத்தி ஒப்பந்த விவரங்களைத் தயாரிப்பார்கள் இதற்காக ஜனவரி 3 வது வாரம் ரமேஷ் பண்டாரி பாகிஸ்தான் செல்கிறார்.

## மருமகள் நகையை மோசடி செய்த மாமியார் கைது

சென்னை, டிச. 20— சென்னை பெரம்பூரைச் சேர்ந்தவர் 'கோவர்த்தனம்' இவரது மகள் உஷாராணிக்கும் (வயது 5) மின்ட்தெரு பாபுவுக்கும் (வயது 28) கடந்த ஆண்டு ஜூலையில் திருமணம் நடந்தது.

வரதட்சணையாக பாபுவுக்கு பத்தரைசவரன் நகையும் 5 ஆயிரம் ரூபாய்க்கு சாமான்களும் 5 ஆயிரம்ரூபாய் ரொக்கமும் கொடுத்தார்கள்.

அந்த நகைகளையும் பணம் மற்றும் சாமான்களையும் பாபுவும் அவரது தாய் நிலாவதியும் (வயது-47) சேர்ந்து அடகு வைத்தும் தனது மகள்களுக்கும் கொடுத்தனராம்.

இதுபற்றி உஷாராணி கேட்ட போது தகராறு முற்றி அரிவாள்மணையால் உஷாராணியை இருவரும் சேர்ந்து வெட்டினராம்.

இதுபற்றி மத்திய குற்றபிரிவில் புகார் செய்யப்பட்டது போலீசார் நிலாவதியையும் பாபுவையும் கைது செய்தனர்

# தஞ்சை பயிரைக் காப்பாற்ற புரட்சித்தலைவர் நடவடிக்கை

### ஹெக்டேவுடன் டாக்டர் நாவலர்-யூசுப் பேச்சு

சென்னை, டிச. 20— மேட்டூர் அணையின் நீர்மட்டம் மிகவும் குறைந்துவிட்டதால் தஞ்சை மாவட்டத்தில் சம்பா நெல் பயிர்கள் வாடுகின்றன. எனவே காவிரியில் தண்ணீர் திறந்து விடுமாறு மத்திய அரசை வற்புறுத்த அமைச்சர்கள் டாக்டர் நாவலர், யூசுப் இருவரும் டெல்லி சென்றனர்.

டெல்லியில் கர்நாடக முதல்வர் ஹெக்டேயைப் அவர்கள் சந்தித்து தண்ணீர் திறந்து விடுமாறு கேட்டுக் கொள்வார்கள்.

மேட்டூர் அணையில் அதிகபட்சம் 120 அடி உயரத்திற்கு தண்ணீர் சேமித்து வைக்க முடியும். ஆனால் மேட்டூர் அணையில் நேற்றைய நீர்மட்டம் 23½ அடிதான் உள்ளது.

தமிழ்நாட்டின் நெற்களஞ்சியம் என்று கருதப்படும் தஞ்சை மாவட்டம உட்பட காவிரி டெல்டா, பகுதி விவசாயத்திற்கு மேட்டூர் அணை தண்ணீரையே நம்பி உள்ளது.

மேட்டூர் அணையில் நீர்மட்டம் 'கிடுகிடு' என்று குறைந்து வருவதால் இப்போதுள்ள தண்ணீர் இன்னும் 6, 7 நாட்களுக்கு மட்டுமே வரும் என்று கருதப்படுகிறது.

எனவே காவிரி டெல்டா பகுதியில் பயிரிடப்பட்டுள்ள சம்பா நெல்லுக்கு ஆபத்து ஏற்பட்டுள்ளது.

### தண்ணீரின்றி வாடும் நெற்பயிர்

எனவே தண்ணீர் இல்லாமல் வாடும் சம்பா பயிர்களை காப்பாற்ற காவேரியில் தண்ணீர் திறந்து விடுமாறு கர்நாடக அரசிடம் கேட்டுக் கொள்வதற்காக நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் நீர்ப்பாசன அமைச்சர் யூசுப் ஆகியோர் பெங்களூர் சென்றனர்.

சென்ற முன் தினம் கர்நாடக முதல்வர் ஹெக்டேயை சந்தித்துப் பேசினார்கள். இந்த பேச்சு வார்த்தை முடிவடையாத நிலையில் சென்னை கருத் திரும்பினர்.

முதல்வர் புரட்சித் தலைவரின் வேண்டுகோளின்படி மேட்டூர் அணைக்கு உடனடியாக தண்ணீர் திறந்துவிட வேண்டும் என்று மத்திய அரசிடம் வற்புறுத்துவதற்காக அமைச்சர்கள் டாக்டர் நாவலர் யூசுப் இருவரும் நேற்று மாலை விமானம் மூலம் டெல்லிக்கு அவசரமாக புறப்பட்டு சென்றனர் அவர்களுடன் தலைமை செயலாளர் டி.வி. அந்தோணியும் சென்றுள்ளார்.

டெல்லியில் மத்திய அமைச்சர் சங்கரானந்தை சந்தித்து தமிழகத்தின் தண்ணீர் நிலைமையை எடுத்துச் சொல்வார்கள்.

தற்போது கர்நாடக முதல்வர் ஹெக்டே டெல்லியில் இருப்பதால் மத்திய அமைச்சர் முன்னிலையில் ஹெக்டேயையும் தமிழக அமைச்சர்கள் சந்தித்துப் பேசுவார்கள்.

பேச்சுவார்த்தையை முடித்துக் கொண்டு அவர்கள் நாளை (சனிக்கிழமை) சென்னை திரும்புவார்கள்.

டெல்லி புறப்படும் முன்பு அமைச்சர் டாக்டர் நாவலர் நிருபர்களிடம் கூறியதாவது:-

டெல்லியில் மத்திய அமைச்சர் பூட்டாசிங்கையும் சந்தித்து பேசுவேன் அப்போது தமிழகத்துக்கு உள்ள நிவாரண நிதியை உடனடியாக அனுப்பும்படி கேட்டுக் கொள்வேன்.

இவ்வாறு நிதி அமைச்சர் நாவலர் கூறினார்.

விமான நிலையத்தில் அமைச்சர்களையும் தலைமைச் செயலாளரை யும் அமைச்சர் வீராசாமி வழியனுப்பி வைத்தார். அதற்கு முன் அமைச்சர் நாவலரிடம் வீராசாமி கூறியதாவது:

மேட்டூர் அணையில் இன்றைய நிலவரப்படி 5394 மில்லியன் கன அடி தண்ணீர் தான் இருக்கிறது அணைக்கு வினாடிக்கு 2194 கன அடி தண்ணீர் வருகிறது.

6600 கன அடி தண்ணீர் கல்லணையில் இருந்தும், வெண்ணாற்றிலிருந்தும் சமமாக திறந்துவிடப்படுகிறது.

இந்த தண்ணீரும் 4 அல்லது 5 நாட்களுக்குத் தான் போதுமானதாக உள்ளது தற்போது பயிர்களுக்கு தண்ணீர் உடனடியாக தேவைப்படுகிறது. ஆகவே மத்திய அரசிடம் தமிழக நீர் நிலைமையை எடுத்துச்சொல்லி உடனடியாக நமது தண்ணீர் தேவையை நிறைவேற்ற வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் வீராசாமி, நிதி அமைச்சர் நாவலரிடம் கூறினார்.

மா.அ(வ) ந.க.எண். ஆர்4/ 1762/ 8

### சென்னை மாநகராட்சி

மாவட்ட அலுவலகம் (வடக்கு) சாலைகள்,

நாள்: 17—12—85

### ஒப்ப அறிவிப்பு

மூடி அரக்கு முத்திரையிடப்பட்ட தனித்தனி ஒப்பங்கள் கீழ் குறிப்பிட்ட பணிகளுக்காக, வேத இலக்கில் குறிப்பிட்டுள்ள சென்னை மாநகராட்சி பதிவு ஒப்பந்தக்காரர்களிடமிருந்து சென்னை மாநகராட்சி உதவி ஆணையாளர் (வடக்கு) 1, அவர்களால் 3—1—1986 தேதி, பிற்பகல் 3மணி வரை பெற்றுக் கொள்ளப்படும். உறையின் மீது பணியின் பெயரைக் குறிப்பிடல் வேண்டும். ஒப்பப்படிவத்துடன் பணியின் எதிரே குறிப்பிட்டுள்ள ஒப்ப வைப்புத் தொகைக்காக சென்னை மாநகராட்சியின் கருவூல செலுத்துச்சீட்டோ அல்லது அரசுடைமையாக்கப்பட்ட அல்லது அங்கீகரிக்கப்பட்ட வங்கிகளில், ஆணையாளர், சென்னை மாநகராட்சி அவர்களின் பதிவுப்பெயரில் பெறப்பெற்ற வரைவோ இணைத்தல் வேண்டும். ஒப்ப வைப்புத்தொகை இணைக்கப்படாத ஒப்பங்கள் கண்டிப்பாக நிராகரிக்கப்படும். ஒப்பந்தக்காரர்கள் 8-10 டன் எடையுள்ள சாலை உருளைகள், தார் காய்ச்சும் பாய்லர்கள், நகர்த்தக்கூடிய உஷ்ண தார்க்கலவை இயந்திரங்கள் ஆகியவற்றை சொந்தமாக வைத்திருப்பவர்களாக இருக்க வேண்டும். சென்னை மாநகராட்சி இக் கருவிகளைத் தர இயலாது. ஒப்பந்தக்காரர்கள் தாங்கள் உபயோகிக்கும் மேற்படி கருவிகளின் பத்திரங்களின் நகல்களை ஒப்பபடிவத்துடன் இணைத்து அனுப்பக் கோரப்படுகிறது அவ்வாறு பெறப்படாத ஒப்பங்கள் நிராகரிக்கப்படும் இதற்கான மூலப் பத்திரங்கள் தேவைப்படும்போது காண்பிக்கப்பட வேண்டும்.

| வ. எண் | பணியின் பெயர் | பணியின் தோராய மதிப்பீடு லட்சங்களில் | ஒப்ப வைப்புத் தொகை | ஒப்ப படிவத்தின் விலை | ஒப்பந்தக்காரர் களின் பதிவு நிலை |
|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| | | ரூ. | ரூ. | ரூ. | |
| 1. | 36 லிருந்து 55ஆவது கோட்டங்களிலுள்ள பேருந்து சாலைகளில் அவசரப்பழுது பார்க்கும் பணிகள். | 7.5 | 7500/- | 50/- | 1ஏ-வும் அதற்கு மேலும் |
| 2. | 56 லிருந்து 75ஆவது கோட்டங்களிலுள்ள பேருந்து சாலைகளில் அவசரப்பழுது பார்க்கும் பணிகள். | 7.5 | 7500/- | 50/- | 1ஏ-வும் அதற்கு மேலும் |

ஒப்பப்படிவங்கள் நிபந்தனைகள், சென்னை மாநகராட்சி விசாரணை அலுவலகத்தில் ரூபாய் 50/— (ரூபாய் ஐம்பது மட்டும்) செலுத்தி பெற்றுக் கொள்ளலாம்.

ஒப்பப் படிவங்கள் விற்பனை 31,12,85ம் தேதி பிற்பகல் 3.00 மணிக்கு நிறுத்தப்படும்.

உதவி ஆணையாளர் (வடக்கு) - 1.

## பஜாஜ் கம்பெனி அதிபர்களிடமிருந்து ரூ.30 லட்சம் சிக்கியது

ஆமதாபாத், டிச. 20. பஜாஜ் கம்பெனி அதிபர்களிடம் நடத்திய கருப்பு பணசோதனையில் ரூபாய் 30 லட்சம் கைப்பற்றப்பட்டது.

பஜாஜ் ஆட்டோ ஸ்கூட்டர் தயாரிக்கும் நிறுவனத்தின் முதலாளிகளின் வீடுகளிலும், அலுவலகங்களிலும் கறுப்புப்பண வேட்டை நடந்தது.

கணக்கில்காட்டப்படாத நகை-ரொக்கம் ரூபாய் 30 லட்சம் கைப்பற்றப்பட்டது.

பரோடா, ராஜ்கோட் ஆகிய இடங்களில் நடந்த சோதனைகளில் மேற்படி சொத்துக்கள் கைப்பற்றப்பட்டன.

கடந்த இரு தினங்களாகவே பஜாஜ் நிறுவனத்தில் கறுப்புப்பண வேட்டை நடந்து வருகிறது. அந்தசோதனையில வெளிநாட்டு கரன்சிகள் சிக்கியதாக தெரிகிறது.

## ஹாலியை படம் பிடிக்கும் ஹாலி

நியூயார்க், டிச. 20— அமெரிக்காவின் கொலம்பியா விண்வெளி ஓடம் விரைவில் விண்வெளியில் செலுத்தப்பட உள்ளது.

இந்த ஓடத்தில் செல்ல உள்ள 7 பேரில், ஒருவர் பெயர் ஹாலி

இவர் 35 எம்.எம். காமிராவைப் பயன் படுத்தி ஹாலிவால் நட்சத்திரத்தை படம் எடுப்பார்.

அதோடு அல்ட்ரா வயலட் டெலஸ்கோப் மூலம் அவர் ஹாலிவால் நட்சத்திரத்தைப்பற்றி மேலும் ஆராய்ச்சி நடத்துவார்.

## விமானத்தை பறவை தாக்கியது

புதுடெல்லி, டிச. 20— இந்தியன் ஏர்லைன்ஸ் விமானம் ஒன்று டெல்லி விமான நிலையத்தில் இறங்கும் போது பறவை ஒன்று அதை தாக்கி விட்டது அதனால் விமானத்தின் இயந்திரம் பாதிக்கப்பட்டது என்றாலும் விமானம் பத்திரமாக தரை இறக்கப்பட்டது.

# நடுக் கடலில் கப்பல் மூழ்கி 200 பேர் மரணம்

மணிலா, டிச. 20— நடுக்கடலில் கப்பல் மூழ்கி 200 பேர் இறந்தனர்.

மணிலாவிற்குத் தெற்கே கடலுக்குள் 80 கிலோ மீட்டர் தூரத்தில் ஒரு கப்பல் சென்று கொண்டிருந்தது.

அதில் கோளாறு ஏற்பட்டு மூழ்கத் தொடங்கியது. தூரத்தில் சென்று கொண்டிருந்த மற்றொரு கப்பல் அதை அறிந்து அவசர அவசரமாக உதவிக்கு விரைந்தது அதற்குள் அந்தக் கப்பல் முழுவதுமாக மூழ்கி விட்டது கப்பலில் இருந்த 203 பேரில் 200 பேர் இறந்துவிட்டனர். 3 பேரை மட்டும் உதவிக்குச் சென்ற கப்பல் காப்பாற்றியது.

ம.நீ.வ.எண்.சி1/4030/ 3430/ 4031/85

### சென்னை மாநகராட்சி

மழை நீர் வடிகால் வட்டம்

தேதி 16—12—85

### ஒப்ப அறிவிப்பு

சென்னை மாநகராட்சியில் கட்டம் 4ல் குறிப்பிட்டிருக்கும் நிலைக்கு குறையாமல் பதிவு செய்துள்ள பதிவு ஒப்பந்தக்காரர்களிடமிருந்து கீழ் குறிப்பிட்ட ஒப்பந்தத்திற்கான மூடி அரக்கு முத்திரையிடப்பட்ட ஒப்பங்கள் ஒவ்வொன்றிற்கும் எதிரில் குறிப்பிட்டிருக்கும் ஒப்ப வைப்புத் தொகையை (கட்டம் 5) சென்னை மாநகராட்சி கருவூலத்தில் செலுத்தியதற்கான செலுத்துச் சீட்டு அல்லது அரசுடைமையாக்கப்பட்ட அல்லது அங்கீகரிக்கப்பட்ட வங்கிகள் ஒன்றிலிருந்து சென்னை மாநகராட்சி வருவாய் அலுவலர் பெயரில் பெறப்பட்ட வங்கி வரைவுடன் தனித்தனியாக குறிப்பிட்ட நமூனாவில் ஒவ்வொரு ஒப்பந்தத்திற்கும் எதிரில் குறிப்பிட்டிருக்கும் தேதிகளில் (கட்டம் 8) பிற்பகல் 3மணிவரை சென்னை மாநகராட்சி மழை நீர் வடிகால் மேற் பார்வைப் பொறியாளர் அவர்களால் அவரது அலுவலகத்தில் பெற்றுக் கொள்ளப்படும்.

ஒப்ப வைப்புத் தொகையை ஒரு உறையிலும், ஒப்பந்தத்தை மற்றொரு உறையிலும் வைத்து இவ்விரண்டு உறைகளையும் மூடி அரக்கு முத்திரையிடப்பட்ட ஒரு தனி உறையிலும் வைத்து அதன் மீது "சிறிய வேலை ஒப்பந்த எண் 442, 443, 444 தேதி 8.1-86 அன்று பிற்பகல் 3 மணி வரை கொடுக்க வேண்டியது" என்று குறிப்பிட்டு இருக்க வேண்டும்.

ஒப்ப நமூனா, ஒப்ப நிபந்தனைகளை, மற்ற விபரங்களை ஒவ்வொரு ஒப்பந்த எண்ணுக்கும் எதிரில் குறிப்பிட்டுள்ள (கட்டம் 7) தொகையை செலுத்தி சென்னை மாநகராட்சி விசாரணை அலுவலகத்தில் பெற்றுக் கொள்ளலாம்:

ஒப்ப நமூனா விற்பனை கட்டம் 6ல் குறிப்பிட்ட தேதிகளில் பிற்பகல் 2 மணிக்கு நிறுத்தப்படும்

| வ. எண் | சிறிய வேலை ஒப்பந்த எண் | பணியின் பெயர் | பதிவு செய்துள்ள ஒப்பந்தக்காரர் நிலை | ஒப்ப வைப்புத் தொகை | ஒப்ப நமூனா பெறக்கடைசி நாள் |
|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| | | | | ரூ. | |
| 1. | 442 | கோட்டம் 32 பேப்பர்மில்ஸ்சாலையில் ஹரிகாஸ் (நாயுடு) தெரு சந்திப்பின் அருகில் தற்பொழுதிருக்கும் மழைநீர் வடிகால் வாயையும் சக்திவேல் நகரிலுள்ள மழைநீர் வடிகால் வாயையும் இணைக்கும்படி 3×3 அளவிலான மழைநீர் வடிகால் கட்டுதல் | மூன்று | 1076 | 6-1-86 |
| 2. | 443 | கோட்டம் 32 பூம்புகார் பிரதான சாலையிலுள்ள ஜயராம் நகர் கால்வாய் முடியுமிடத்தில் பாலாஜிநகர் சாலையிலுள்ள உபரி கால்வாய் வரை மண் கால் வாய் வெட்டுதல் மற்றும் சாலை சந்திப்பில்வலுவேற்றப்பட்ட சிமெண்ட் குழாய்களை அமைப்பது | நான்கு | 730 | 6-1-86 |
| | | 7. ஒப்ப நமூனா விலை ரூபாய் 50 | | | |
| | | 8. ஒப்ப நமூனா பெறும் கடைசி நாள் 8-1-86 | | | |
| 3. | 444 | கோட்டம் 32 வேலன் நகர அருகில் பேப்பர்மில்ஸ்சாலை குறுக்கே 4'5' அளவிலான ஆரண சிறு பாலம் கட்டுதல். | ஐந்து | 345 | 6-1-86 |
| | | 7. ஒப்ப நமூனா விலை ரூபாய் 25 | | | |
| | | 8. ஒப்ப நமூனா பெறும் கடைசி நாள் 8-1-86 | | | |

(ஒம்) வி அஸ்ரார் பஹாபு
மேற்பார்வை பொறியாளர்